# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - மாசி - 2018 - பிப்ரவரி

கோவிலூர் மடாலயத்தின் 200ஆவது ஆண்டு
நிறைவு விழா - நூல் வெளியீட்டு நிகழ்ச்சி

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - மாசி - 2018 - பிப்ரவரி இதழ் - 68

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

திருமாலுக் கிளையவளேதேன்நதியின் சீதனமே

தென்மதுரைப் பொன்மகளேதேவ தேவர்

தினம் வணங்கும் பேறுடையபாண்டி மன்னர்

திருமகளே உலகனைத்தும் காப்பவளே பன்னகத்தான்

தேடிவந்து மணந்தவளே எங்கள்தாயே

திருமுறையின் உட்பொருளேமறைக்கும் எட்டாத்

திருநெல்லை என்னும் பேர் கொண்டவளே கொற்றவையே

தேவர்களும் அறியாத தேவிநீயே

திகழ்சாலி நெல்காத்த பெண்ணே என்றும்

அருள் காட்டும் ஆரணங்கே ஆருயிரேவன்னிவனம்

ஆளவந்த பொன்மயிலே என்றும் உன்றன்

அடிதொழவே நாம்மறவோம் அருள்வாய் அம்மா

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

*ஓம் ஸஹ நாவவது1 ஸஹ நௌ புனக்து1 ஸஹ வீர்யம்*
*கரவாவஹை1 தேஜஸ்வி நாவதீதமஸ்து மா வித்விஷாவஹை 11*

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி : 11

ஆச்சாரியர், சீடர் ஆகிய நம் இருவரையும் இறைவன்
காப்பாராக! அறிவின் ஆற்றலை நாம் இருவரும்
அனுபவிக்குமாறு ஊக்குவிப்பாராக! நாம் இருவரும்
ஈடுபாடுமிக்க ஆற்றலுடன் உழைப்போமாக! கற்றது
நமக்குப் பயனுள்ளதாக விளங்கட்டும்! எதற்காகவும்
நாம் ஒருவரையொருவர் வெறுக்காமல் இருப்போமாக!

குறைகளும் தடைகளும் இல்லாமல் உபநிஷதக் கல்வி நிறைவேற இந்த மந்திரம் பிரார்த்திக்கிறது.

மேலே கூறியுள்ள ஸ்லோகம் கட உபநிஷத்தில் உள்ள சாந்தி மந்திரம். வேதத்தின் அந்தமாக (வேதாந்தம்) உபநிஷத்துக்கள் சொல்லப்படுள்ளன. அவை மனிதனால் படைக்கப்பட்டவை அல்ல; பரம்பொருளாலே போதிக்கப் பட்டவை என்ற ஆழ்ந்த நம்பிக்கை பாமர மக்களிடம் காணப்படுகின்றது. எனவே உபநிஷத்துக்கள் சுருதி (இயற்கையாக தோன்றியவை) என்று அழைக்கப்படுகின்றன. ஞானிகளாலும், ரிஷிகளாலும் படைக்கப் பட்ட நூல்கள் ஸமிருதி என்று அழைக்கப்பெற்றன. பகவத் கீதை, திருமந்திரம் போன்றவை இந்த வகையிலே அடங்கும்.

அடுத்து இதிகாசங்கள், புராணங்கள் என்று அழைக்கப் பட்டவையும் மக்களுக்கு நன்னெறிகளைக் கற்பிப்பதற்காகப் படைக்கப் பட்டவையே.

எல்லா நூல்களும், சாஸ்திரங்களும் சாந்தி மந்திரங்கள் அல்லது கடவுள் வாழ்த்துப் பாடல்களுடனேயே தொடங்கப்படுகின்றன. பரம்பொருளை வணங்கவும், வேண்டவும் சாந்தி மந்திரங்கள் பாடப்பட்டன. இவற்றைத் தமிழ் மொழியிலே பாயிரம் என்று அழைப்பது மரபு. மேலே குறிப்பிட்டவை ஸ்லோகம் என்று பொருள்படும்.

தொடங்கிய கல்வியை ஐயமற, தெளிவாகக் கற்பிப்பதற்கும், கற்கின்ற கல்வியை நம் மனமதில் ஆழமாக ஊன்றி நிலைத்து நிற்பதற்கும் ஏதுவாக மேற்படி ஸ்லோகம் சாந்தி மந்திரமாகச் சொல்லப்படுகின்றது.

தமிழ் மரபிலே பாயிரம் எனப்படும் பகுதி, எழுதப்படுகின்ற பொருளை, நூலை எத்தவறும் வராமல் நிறைவு செய்வதற்காகவும் நூலில் பிழைகள் ஏற்படாமல் காப்பதற்காகவும், நூலில் பெறப்படுகின்ற பயன்களைத் தெரிவிப்பதற்காகவும் பாடல்கள் எழுதப்பட்டன.

இதனை வடமொழி முறைப்படி 1. நமஸ்கர மங்கலம் 2.வஸ்து நிர்தேச மங்கலம் 3.ஆசீர்வாத மங்கலம் என்று மூன்று வகைப் படுத்துவார்கள்.

**1. நமஸ்கார மங்கலம் :**

நாம் பாட எடுத்துக் கொண்ட நூல் எவ்வித இடையூறும் இன்றி இறைவன் அருளாலே இனிது நிறைவேற வேண்டும் என்று பரம்பொருளை வேண்டிக் கொள்வது.

**2. வஸ்து நிர்த்தேச மங்கலம் :**

பாடப்படப் போகின்ற நூலிலே சொல்லப்படுகின்ற பொருளைப் பற்றிய தெளிவான ஆனால் சுருக்கமான விளக்கத்தைக் கொடுப்பது

**3. ஆசீர்வாத மங்கலம் :**

பரம்பொருள் இதனைப் படிக்கின்ற அனைவரையும் ஆசீர்வதித்து அவர்களுக்கு நல் அறிவைத் தரவேண்டும் என்று வேண்டுகோளை முன்வைப்பது. இதனை நூல் பயன் என்றும் அழைக்கலாம்.

மேலும் இறைவனிடம் புலவர் தனக்கு அகங்காரம் தோன்றிவிடாமல் நூலை முடிக்கும் வரை அடக்கமான மனநிலையைத் தரவேண்டும் என்று வேண்டுவது இதனை அவையடக்கம் என்றும் கூறுவர்.

இவ்வாறு பழங்கால ஸ்ருதி, ஸ்மிருதி, புராண இதிகாசங்கள் மற்றும் தோற்றுவிக்கப்பட்ட அனைத்து நூல்களும் இந்த மரபினைப் பின்பற்றியே செல்கின்றன.

தமிழ் இலக்கியங்களில் தொல்காப்பியம் தொடங்கி பாடப்பட்ட அனைத்து இலக்கிய நூல்களும் இம் மரபினைப் பின்பற்றியே உள்ளன. இறைவனை முன் நிறுத்திச் செய்கின்ற எக்காரியமும் வெற்றி அடையும் என்ற நம்பிக்கை உணர்வே இம் மரபு.

*ஆசிர்வாதங்கள்*

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## அறநெறி ஆற்றுக

டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற

மனத்தைத் தூய்மையாக வைத்திருப்பதே தலைசிறந்த அறம் என வள்ளுவர் அறிவுறுத்துகிறார். மனத்தை மாசுபடாமல் வைத்துக்கொள்ளும் நெறிமுறைகளின் தொகுப்பு அறநெறி எனப்படுகின்றது. அறநெறி மனிதவாழ்வின் தவநெறியாகும். இதனை வலியுறுத்திய வள்ளுவர், அறன்எனப்பட்டதே இல்வாழ்க்கை என்று பதிவுசெய்தார்.

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்.

பொறாமை, ஆசை, சினம், கடுமையான சொல் என்கிற நான்கிலிருந்து விலகியிருக்கும் வாழ்வு அறவாழ்வாகும் என்பது அறம் என்பதற்குத் திருவள்ளுவர் தரும் இலக்கணமாகும். அறநெறி என்கிற மானுடநெறியினை இறைநெறியோடு பன்னிரு திருமுறைகளும், பக்தி இலக்கியங்களும் கற்பிக்கின்றன. இறைவனைத் தூயவனாகக் காட்டுவன பக்தி இலக்கியங்கள். இறைவனது திருவடியினைத் தொழ நினைந்துருகும் அடியவனும் தூயவனாக இருக்கவேண்டும். தூய்மையான அடியார்களுக்குத்தான் தூயவனாக நிற்கும் இறைவனது திருவருள் கிட்டும். அவனருளாலே அவன்தாள் வணங்கி என்கிறது திருவாசகம். பக்தி இலக்கியங்கள் மனிதர்களுக்கு அறநெறிகளைக் கற்றுக்கொடுத்து அறவாழ்வினைப் பெற உதவுகின்றன. பாசத்திலிருந்து விலகினால் பசுவாகிய மனிதன் பதி என்னும் இறைவனை அடையலாம் என்பது சைவசித்தாந்த நெறியாகும். பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் இவற்றிலிருந்து விலகி நிற்பது, பாசத்திலிருந்து விலகிநிற்பதற்குச் சமமாகும்.

இயமநெறியும், நியமநெறியும் அறநெறியும் அறநெறிவாழ்வின் அடிப்படை நெறிகளாகும் எனத் திருமந்திரம் விளக்குகின்றது.

இவ்விருநெறிகளும் அறநெறிவாழ்வின் இருகண்களாகும். இயமநெறி என்பது தீயசெயல்களைச் செய்யாதிருத்தலாகும். நியமநெறி என்பது நல்லசெயல்களைச் செய்வதாகும். ஒருவன் நல்ல செயல்களைச் செய்யவேண்டும். அதே நேரத்தில் தீயசெயல்களைச் செய்யாமலும் இருக்க வேண்டும். அப்போது தான் அறநெறியில் வாழ்ந்திட இயலும். நாம் தான் நல்ல செயல்களைச் செய்கிறோமேயென்று இச்சிறிய தீங்கினைச் செய்தால் என்ன என்று செய்துவிடக் கூடாது. மருந்து என்பது நோயைக் குணப்படுத்த வேண்டும். நோயைக் குணப்படுத்துவதோடு, பக்கவிளைவுகளையோ, பின்விளைவுகளையோ ஏற்படுத்திவிடக் கூடாது. மருந்தின் பயனும் மதிப்பும் இல்லாதுபோகும். இதனை வலியுறுத்தியே தீதிலா நன்மை திருவருட்குன்றே என மாணிக்கவாசகரும், நன்றுடையானை, தீயதில்லானை எனத் திருஞான சம்பந்தரும் இறைவனைப் போற்றிப்பாடியுள்ளனர். நியமநெறியினைத் திருமூலர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

தூய்மை அருளுண் சுருக்கம் பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமம் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே *திருமந்திரம் 556*

தூயமனம், கருணை உள்ளம், உண்டி சுருக்கம், பொறுமை, நேர்மை, உண்மை பேசுதல், நடுநிலை தவறாதிருத்தல், காமம், திருட்டு, கொலை ஆகிய தீய செயல்களைச் செய்யாதிருத்தல் ஆகிய பத்துக் குணங்களைத் தன்னகத்தே கொண்டிருப்பவன் நியமத்தன் எனத் திருமூலர் அறிவுறுத்தியுள்ளார். நியமத்தன் என்கிற உயரிய பண்பினைப் பத்துக் குணங்களோடு திருமூலர் வரையறை செய்துள்ளார். நியமம் சார்ந்த பத்துக் குணங்கள் மனிதனது வாழ்வில் அறிநெறிகளை வளர்க்க உதவும். அறமும் அன்பும் தழைத்தோங்கும். அன்பும் அறமும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது என்கிற திருக்குறளுக்கு ஏற்ப இல்வாழ்க்கையும் அமையும். நியமத்தன் என்கிற உயரிய பண்பினை உடையவர், இறைவனை உணர்ந்து அறிந்திட முடியும் எனத் திருமூலர் தமது திருமந்திரத்தில் விளக்குகின்றார்.

ஆதியை வேதத்தின் அப் பொருளானைச்
சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்

பாதியுள் மன்னும் பராசக்தியோடு உடன்
நீதி உணர்ந்த நியமத்தன் ஆமே. *திருமந்திரம் 555*

ஆரம்ப(மூல) முதல்வனாக இருப்பவனை, வேதத்தின் பொருளானவனை, சோதிவடிவானவனை நெருப்பாக இருப்பவனை, தம்உடலில் சரிபாதி பராசக்திக்குக் கொடுத்தவனை முறையாக உணர்ந்து அறிந்தவன் நியமத்தன் ஆவான் எனத் திருமூலர் தெளிவுபடுத்துகின்றார். பத்துக் குணங்களை நியமத்தனுக்கான குணங்களாகத் திருமூலர் கூறியிருப்பதை அறிந்தோம். அப்பத்துக் குணங்களை முறையாகக் கடைப்பிடித்து வாழ்வோர்க்கு, பரம்பொருளான சிவனை உணர்ந்து அறியும் உயரிய தவநெறி கிட்டும் என்பதைத் திருமூலர் மந்திரத்திலிருந்து உணரமுடிகின்றது. நியம குணங்கள் மனிதனை அறநெறிப் பாதையில் கொண்டு செல்லும்.

இயமம் என்றால் தீயன செய்யாதிருத்தல் எனப் பொருள்படும். மனிதன் இயமானனாயிருப்பின் அறநெறிகள் கைகூடும். அறவாழ்வு வசப்படும். இயமநெறிகளைக் கீழ்க்காணும் திருமந்திரம் விளக்குகின்றது.

கொல்லான் பொய்கூறான் களவுஇலான் எண்குணன்
நல்லான் அடக்கம் உடையான் நடுச் செய்ய
வல்லான் பகுத்துஉண்பான் மாசுஇலான் கள்காமம்
இல்லான் இயமத்து இடைநின் றானே.

உயிர்க்கொலை செய்யாதிருத்தல், பொய் சொல்லாதிருத்தல், களவுசெய்யாதிருத்தல், எண்ணிப் பார்த்து (செய்யலாமா, கூடாதா என) முடிவு எடுக்கும் குணம் கொண்டிருத்தல், நற்பண்புகளோடு அடக்க உணர்வோடிருத்தல், நடுநிலை வகித்தல், பிறர்க்குத் தந்து பகுத்து உண்ணுதல், மனத்தில் மாசு இல்லாது, கள் காமம் போன்ற தீயகுணங்கள் இல்லாதிருத்தல் ஆகியன இயமத்தனது குணங்களாகும். வெய்யாய், தணியாய், இயமானன், ஆம்விமலா என மாணிக்கவாசகர் இறைவனைப் போற்றுகின்றார்.

திறம்தரு முத்தியும் செல்வமும் வேண்டின்
மறந்தும் அறநெறியே ஆற்றல் வேண்டும், எனத்

திருமூலர் அறிவுறுத்துகின்றார். நிரந்தர செல்வமும், முக்தியும் பெற

வேண்டுமெனில், மறந்திருப்பினும் வாழ்வில் அறநெறி தவறாது வாழ வேண்டும். நியம, இயம நெறிகள், நம் உடலில் மூச்சுக்காற்றுப் போல, உள்ளத்தில் அறநெறிகளாய் விற்றிருக்க வேண்டும். மனிதகுணம் சார்ந்த நியமநெறிகளை வகுத்துத் திருமூலர் பக்தி சார்ந்த நியம நெறிகளையும் வகுத்துள்ளார். மனித குணம் சார்ந்த நெறிகள் வாழ்வியல் நெறிகளாகும். பக்தி சார்ந்த நெறிகள் தெய்வீக நெறிகளாகும். வாழ்வியல் நெறிகளில் முழுமைபெற்று முக்திக்குரிய தெய்வீக நெறிகளில் மனிதன் பயணிக்க வேண்டும் என்பதற்காக மனிதகுணம் சார்ந்த நியமநெறிகளும், பக்திகுறித்த நியமநெறிகளும் திருமூலரால் தரப்படுள்ளன. பக்திசார்ந்த நியமநெறிகள் கீழ்க்காணும் பாடலில் தரப்பட்டுள்ளன.

தவம்செபம் சந்தோடம் ஆத்திகந் தானம்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசையொன் மதிசொல்லிர் ஐந்து
நிவம்பல செய்யின் நியமத்த னாமே.

இறைவனை நினைத்துத் தவம் செய்தல், பஞ்சாக்கர மந்திரத்தைத் (நமசிவாய) தொடர்ந்து உச்சரித்தல், மனிதனாகப் பிறந்ததற்கு மகிழ்ச்சியடைதல், இறைவன் உண்டென்று நம்பி இறை உணர்வோடு இருத்தல், பிறர்க்குக் கொடுத்து வாழ்தல், சிவசிந்தனையை விரதமாகக் கொண்டு வாழ்தல், சைவ சித்தாந்த ஞானத்தில் தோய்ந்திருத்தல் (பசு, பதி, பாசம் உணர்தல்), வேள்வி செய்தல், சிவ பூசையில் ஈடுபட்டிருத்தல், சோதி வழிபாடு செய்தல் ஆகிய பத்து நெறிகளும், தெய்வீக இயமநெறிகளாகும். இந்நெறிகள் மனிதனைத் தெய்வீக நிலைக்கு உயர்த்தும். எண்ணமே உடல் வாய் மூக்கொடு செவிகள் என்றிவை நின்கணே வைத்து மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய் வருக என்று அருள்புரியாயே என மாணிக்கவாசகர் வேண்டுகின்றார்.

புலன்கள் அனைத்தும் இறைவனிடத்தே வைத்து, மண்ணில்மேல் அடியார்கள் வாழ்ந்து முக்தி பெற்றிட, தெய்வீக இயம நெறிகள் உதவிடும் என்பது திருமூலரின் வாக்கு, நாம் இம்மண்ணில் வாழும் போதும் வாழ்ந்து முடிந்த பிறகும் நமக்காக இந்த மண்ணில் நிரந்தரமாக வாழ்ந்து கொண்டிருப்பது வாழ்நாளில் நாம் கடைப்பிடித்த அற நெறிகளாகும். நம்மை அடையாளம் காட்டிய வாழ்வியல்

நெறிகளும், தெய்வீக நெறிகளும் என்றும் நம்மோடிருக்கும் என்பதைத் திருமூலர் கீழ்க்காணும் தமது திருமந்திரத்தில் தெரிவித்துள்ளார்.

பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமு மல்லது
மண்டி யவருடன் வழிநட வாதே *திருமந்திரம் 144*

வாழ்வில் பல்வேறு வசதி வாய்ப்புகளை உருவாக்கிக் கொடுத்த இந்த உடம்பிலிருந்து உயிர் பிரிந்த பிறகு வசதி வாய்ப்புகள் பயன்படுத்திக்கொண்ட மனையாளும் மற்ற வாரிசுகளும் பின்தொடரமாட்டார்கள். வாழ்வில் கடைப்பிடித்த விரதமும், ஞானமும் அல்லாது வேறெதுவும் பின் தொடராது. விரதமும் ஞானமும் என்பது வாழ்வில் மேற்கொண்ட அறநெறிகளாகும். அறநெறிகளே நாம் வாழ்ந்து முடிந்த பின்பும் நமக்காக வாழ்ந்து கொண்டிருக்கும். இக்கருத்தினையே கீழ்க்காணும் பட்டினத்தார் பாடல்கள் உணர்த்துகின்றன.

மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும்தன் வாயில்மட்டே
இனமான சுற்றம் மயானமட்டே; வழிக்கேது துணை
தினையாம் அளவெள் ளளவா கினுமுன்பு செய்ததவந்
தனையாள என்றும் பரலோகஞ் சித்திக்கும்; சத்தியமே

அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே விழிஅம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே விம்மிவிம்மியிரு
கைத்தலை மேல்வைத்து அழும்மைந்தருஞ் சுடுகாடுமட்டே
பற்றித் தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே

இப்பாடல் வரிகளை நாம் நமது நெஞ்சில் தாங்கி வாழ்நாள் முழுவதும் வாழ்வியல் அறநெறிகளையும், தெய்வீக அறநெறிகளையும் கடைப்பிடித்து நியமத்தனாகவும் இயமத்தனாகவும் வாழ்வோமாக. வாழ்நாள் முழுதும் அறநெறிகளையே ஆற்றுவோமாக. இத்தகு நன்னெறிக்குப் பன்னிரு திருமுறைகள் என்றும் துணை நிற்கும்.

*ஓம் சிவாய நம*
*திருச்சிற்றம்பலம்*

# முப்பெரும் விழா மகுடம் !

தமிழாகரர் தெ.முருகசாமி, புதுச்சேரி - 9

சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானநல் தேசிகரின்
ஆர்வம் குழைந்திட்ட ஆசியுடன் - தேர்த்திரு
நெல்லைத் திருவருளால் நீள்புகழ் கொண்டதே
எல்லையிலா ஈர்நூறாம் ஆண்டு!

மகுடகுல நல்ல தனவணிக ரான
தகுதிமிகு நல்நகரத் தார்கள் - வெகுவாகக்
கொண்டாடிப் போற்றுகிற கோவிலூர் ஆதீனம்
கண்டதே ஈர்நூறாம் ஆண்டு!

வேள்வியொடு வித்தகச் சொற்பொழி வெல்லாமும்
கேள்விநற் செல்வமாய்த் தித்திக்க - தூள்பறக்கச்
செய்த கலை நிகழ்வால் சிங்காரப் பிள்ளைகட்குப்
பெய்தனபா ராட்டு மழை!

கவிச்செம்மல் பாராட்டும் பாவரங்கப் பண்பும்
புவிபுகழ் நன்னிகழ்வாய்ப் பூக்க - செவிக்கினிமை
கண்ணொடு நாவினிமை நாட்டிய பற்பலவும்
மண்ணீர்மை கொண்டதே மாண்பு

தண்ணார் தமிழிசையைத் தாம்பாடிக் காட்டிட்ட
கண்ணார் கலைநிகழ்வும் கற்கண்டே - பண்ணார்ந்த
பைந்தமிழ் நூல்நான்கின் பொற்பார் வெளியீடும்
தந்ததே பீடுவிழா விற்கு!

குவலயம் போற்றும் கோவிலூரா தீனம்
தவலரும் தண்ணார் விழாவால் - நவிலுறும்
வேதாந்த சித்தாந்தம் வீறு நடைபோட
நாதாந்த மானதே நன்கு!

மூன்று பெருவிழாவும்
முத்தமிழ் முத்தாய்ப்பாய்
ஈன்ற திருநெல்லை
இன்பருளால் - தோன்றுபுகழ்
தொல்வான் விரிவுபோல்
தோன்றி மலர்த்தவே
தொல்மகுடம் பூணும்
தொடர்ந்து!

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

திருக்காரோணம் திருவாரூர் காஞ்சி திருக்காளத்தி திருவிடை மருதூர் திருத்தில்லை முதலான திருத்தலங்களில் இறைவனை நோக்கி நிலையாமை பற்றிக் கூறி அவனருளை வேண்டுக என்று மனத்திற்குக் கூறும் தன்னிலை விளக்கமாகப் பொதுநிலையில் பாடிய பாடல்களை இனிக்காண்போம்.

திருச்சிற்றம்பலத்தில் நடமாடும் கூத்தப்பிரான் நமக்கு அருகிலே இருக்க இந்த வெற்றுடம்பைத் தேடி அலைகின்றோமே. நம்முடைய மனம் பிறவிக்குக் காரணமாகிய பெண்குறியை நாடுகின்றதே ஏ! பேதை செஞ்சே மறைவாய் உள்ள இடத்தைக் கண்கள் தேடுகின்றனவே! என்று இரக்கம் தோன்றப் பாடிய பாடல் இதோ!

*சிற்றம் பலமும் சிவனும் அருகிருக்க*
*வெற்றம் பலம்தேடி விட்டோமே - நித்தம்*
*பிறந்த இடத்தைத் தேடுதே நெஞ்சம்*
*கறந்த இடத்தை நாடுதே கண்.*

இதழோடு கூடிய பூக்களை அணிந்த பெண்களைத் தேடித் திரிந்தவரெல்லாம் போய் விட்டனர். மனமே! நீ தேறியிரு. நீ என்னை நினை. அப்படி இல்லாவிடில் உதைப்பேன். நான் மீளவும் உன்னை நினைத்தால் நீ என்னை உதைப்பாயாக. மனத்தை அலையவிடாமல் காக்க வேண்டும் என்பதே இதன் உட்பொருள்.

தோ(டு) அவிழும் பூங்கோதைத் தோகைதனை இப்போது தேடினவர் போய்விட்டார் தேறிஇரு - நாடிநீ என்னை நினைத்தால் இடுப்பில் உதைப்பேன் நான் உன்னை நினைத்தால் உதை.
இதுவே அந்தக் கருத்தமைந்த பாடல்.

*வாசற் படிகடந்து வாராத பிச்சைக்(கு) இங்(கு)*
*ஆசைப் படுவதில்லை அண்ணலே ஆசைதனைப்*
*பட்டிருந்த காலமெல்லாம் போது*
*பரமேட்டி சுட்(டு) இறந்த ஞானத்தைச் சொல்*

அண்ணலே! பரம்பொருளே! பிறருடைய வாசலுக்குச் சென்றும் கிடைக்காத பிச்சைக்கு ஆசைப்படவில்லை. நான் ஆசைப்பட்டு இருந்த காலமெல்லாம் போதும். எனவே சொல்லுக்கு அடங்காத ஞானத்தைப்

பெறுகின்ற வழியைச் சொல்வாயாக! என்பதே மேற்கண்ட பாடற் பொருள். அதாவது பிச்சை தான் இருக்கும் இடம் தேடிவரின் உண்பேன் என்பதே அதன் உட்பொருள்.

நஞ்சைத் தன்னிடத்திலே கொண்ட பாம்பினை அணிந்த பெருமானை நன்கு தொழுது அவனிடம் இருத்தலும் பிறர் இட்ட பிச்சையினைப் பெற்று உண்பதுவும் பின் கோயில் வாசலுக்கு வந்து தூங்குவதும் சுகம். இதனைத் தவிர வேறு சுகம் இல்லை. பின்வரும் பாடல் கருத்தமைந்த பாடல் இது.

*நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதும்*
*இச்சையில் தான்அங்(கு) இருப்பதுவும் - பிச்சைதனை*
*வாங்குவதும் உண்பதுவும் வந்துதிரு வாயிலிலே*
*தூங்குவதும் தானே சுகம்.*

நான் இருக்கின்ற இடத்தைத் தேடி உருக்கமுடன் உணவளித்தால் உண்பேன். அரனே! வருந்தி அழைத்தாலும் அங்கு செல்ல மாட்டேன். இதனால் என் உடல் இளைத்தாலும் இனிச் செல்ல மாட்டேன். இக்கருத்து முன்னரே உணர்த்தப்பட்டுள்ளது. பாடல் கீழே.

*இருக்கும் இடம்தேடி என்பசிக்கே அன்னம்*
*உருக்கமுடன் கொண்டுவந்தால் உண்பேன் - பெருக்க*
*அழைத்தாலும் போகேன் அரனே! என்தேகம்*
*இளைத்தாலும் போகேன் இனி.*

நம் உயிர் நம் உடலை விட்டுப் போகின்றது. உயிர் விட்ட உடலைச் சுற்றத்தார் சுடலையிலே வைத்துச் சுட்டுவிடப் போகின்றார். எத்தனை துயர்வந்து துன்பப் பட்டாலும் சிவனை ஏத்திப் போற்றுங்கள். அதுவே சுகம் என்று அறிக. வேறு விதமான சுகம் முன்னரே கூறப்பட்டுள்ளது. மேலும் அக்கருத்தை வற்புறுத்தும் விதமாகக் கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

*விட்டுவிடப் போகு(து) உயிர் விட்ட உடலைச்*
*சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார் - பட்டதுபட்(டு)*
*எந்நேர மும்சிவனை ஏத்துங்கள் போற்றுங்கள்*
*சொன்னேன் அதுவே சுகம்.*

உடல் அழிந்தாலும் உலகில் வாழுங்கால் பாவியெனப் பெயர் எடுக்காதே. மடமை வாய்ந்த நெஞ்சே! நீ செத்தவரைப் போலே இரு. அதாவது சும்மா இருப்பதே சுகம் என்று பெரியோர் சொல்லுவர்.

முருகன் அருணகிரியாரை நோக்கி நீ சும்மா இரு என்று சொன்ன கருத்து சிந்திக்கத் தக்கது. அக்கருத்துடைய பாடல் கீழே.

*ஆவியொடு காயம் அழிந்தாலும் மேதினியில்*
*பாவிஎன்று நாமம் படையாதே - மேவிரசர்*
*வித்தாரமும் கடம்பும் வேண்டா மடநெஞ்சே!*
*செத்தாரைப் போலே திரி.*

இறையைக் காணாது அவனைப் பற்றுக என்றால் பற்றாது இருக்கின்ற பாவியாகிய நெஞ்சில் அவன் இருக்கின்றான் என்பதை நெஞ்சமே! நீ சொல்வாயாக! நான் நினைக்காத போதே இறைவன் என்னுள் இருக்கின்றான் என்பதே கருத்து. அக்கருத்தமைந்த பாடல்

*கண்ணுக்குத் தெரியாது வெட்ட வெளிவடிவாய் இருக்கின்ற*
*கட்டளையும் கைப்பணமும் காணாத - இட்டமுடன்*
*பற்(று) என்றால் பற்றாது பாவியேன் நெஞ்சில்அவன்*
*இற்றெனவே வைத்த இயல்பு.*

நெஞ்சமே! நிலையில்லாத இப்பிறப்பை நம்பி இருப்பார்களோ? சேர்த்துவைத்த செல்வம் இருக்க பெரிய மனை இருக்க அவையெல்லாம் சொப்பனம் தோன்றி மறைவது போல் தோன்றி மறையும். விக்கல் எடுத்துப் பற்கள் கிட்டிக் கண் மிகவும் பஞ்சடைந்து இறக்கின்ற நிலையில் நீ வெண்ணிற விடையேறும் பெருமானின் தன்மையை அறியாமல் இருக்கின்றாயே! வாழ்க்கை நிலையற்றது என்பதை உறுதி செய்யும் பாடலைக் கீழே காணலாம்.

*இப்பிறப்பை நம்பி இருப்பாரோ? நெஞ்சமே*
*வைப்(பு)இருக்க வாயில்மனை இருக்கச் சொப்பனம் போல்*
*விக்கிப் பல்கிட்டக் கண்மெத்தப் பஞ்சிட்(டு) அப்பைக்*
*கதிச்செத் துக்கொட்டக் கண்டு.*

நெஞ்சமே!நீ மேலும் இருக்க விரும்புகிறாயே. மேலும் இவ்வுலகில் நிலையென்று வாழ விரும்பினாயே! வெள்ளேற்றுப் பாகனாகிய சிவபெருமானுடைய தன்மையை தீயிட்டுச் சுட்டுவிடுவதைக் கண்டும் வாழ விரும்பலாமா? அதனை விளக்கும் பாடல் இது.

*மேலும் இருக்க விரும்பினையே! வெள்விடையோன்*
*சீலம் அறிந்திலையே! சிந்தையே! - கால்கைக்குக்*
*கொட்டை இட்டு மெத்தைஇட்டு குத்திமொத்தப் பட்டஉடல்*
*கட்டைஇட்டுச் சுட்டுவிடக் கண்டு.*

நெஞ்சே! ஒன்பது வாயில்களை (நவத்துவாரங்கள்) உடையதான தோலால் மூடப்பட்ட இந்த உடம்பின் மேல் ஆசைவைத்து அலைந்தாயே! உயிர்போன இந்த உடம்பை தத்தித் தத்தி வரும் கழுகுகள் தின்னக கண்டும் ஆசை வைக்கலாமா? அதை விளக்கும் பாடல்

*ஒன்பதுவாய்த் தோல்பைக்(கு) ஒருநாளைப் போலவே*
*அன்புவைத்து நெஞ்சே! அலைந்தாயே! - வன்கழுக்கள்*
*தத்தித் தத்திச்சட்டை தட்டிக்கட் டிப்பிட்டுக்*
*கத்திக்குத் தித்தின்னக் கண்டு.*

நெஞ்சமே! மன்னருக்கு நிகராக வாழ்ந்தாரை உயிர் சென்றபின் கட்டிய கோவணத்தையும் உரிந்து எரிந்து கட்டை மீது வைத்து எரிப்பதைக் கண்டும் அவ்வுடல் மீது ஆசைவைத்தாயே! வாழ்வும் செல்வமும் நிலையற்றது என்பதை உணர்க! என்பதைக் கீழ்க்காணும் வெண்பா விளக்குகிறது.

*இன்னம் பிறக்க இசைவையோ நெஞ்சமே!*
*மன்னர்இவர் என்(று) இருந்து வாழ்ந்தாரை - முன்னம்*
*எரித்தகட்டை மீதில் இணைக்கோ வணத்தை*
*உரித்(து) உருட்டிப் போட்டது கண்டு*

அடுத்து நாம் பூமியில் நலமாக வாழ்கிறோம் என்று எண்ணாதே. பிறந்தவுடன் குழந்தைக்குப் பால் புகட்ட எடுக்கும் சங்கு முதலாவதா உள்ளது. நிறைந்த குழல் கொண்ட பெண்கள் என்ற விலங்கு கொண்டு திருமணம் என்ற பெயரால் நடக்கும் போது ஊதப்படும் சங்கு இரண்டாம் சங்கு. உயிர்போம் காலத்தில் ஊதப்படும் சங்கு இறுதியாக ஊதப்படுவது. இதுவே நாம் நலமாக வாழ்ந்தோம் என்பதற்கான தன்மை. அதனை உணர்த்தும் பாடல்

*முதற்சங்கம் அமு(து) ஊட்டும் மொய்குழலார் ஆசை*
*நடுச்சங்கம் நல்விலங்கு பூட்டும் - கடைச்சங்கம்*
*ஆம்போ(து) அ(து) ஊதும் அம்மட்டோ! இம்மட்டோ!*
*நாம்பூமி வாழ்ந்த நலம்.*

பலநாள்கள் இருந்து நாம் பெற்ற உடல்கள் அனைத்தையும் இறுதியில் மண் தின்று விடுமே. அதனால் நாம் இருக்கும் வரை கடவுளின் திருவடிகளை அல்லும் பகலும் சிந்தித்தால் அதுவே நாம் நிலையாக இருக்கும் இடமாகும். பாடல் கீழ் வருகின்றது.

*எத்தனை நாள் கூடிஎடுத்த சரீரம்இவை?*
*அத்தனையும் மண்தின்பது) அல்லவோ? வித்தகனார்*
*காலைப் பிடித்துமெள்ளக் கங்குல்பகல் - அந்தஇடம்*
*மேலைக் குடியிருப்போமே.*

மனிதனே! உலகிலே பொய்யானவற்றையே பேசும் பெண்களை நினைப்பதை விட்டு விலகு. பெண்களை நினைத்து அனுபவிக்கின்ற தன்மையை விட்டுவிடு என்று கூறும் பாடல் வெளிப்படையாக விளக்குகிறது.

*எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்ட பெண்கள்முலை*
*எத்தனைபேர் பற்றி இழுத்த இதழ்நித்தநித்தம்*
*பொய்யடா பேசும் புவியில்மட மாதரைவிட்(டு)*
*உய்யடா! உய்யடா! உய்!*

இருக்கின்ற வாழ்க்கை பொய் உயிர் விட்டுப் போவதே உண்மை என்று எண்ணும் நெஞ்சமே! ஆதலால் ஒருவருக்கும் தீங்கு செய்ய எண்ணாதே. இந்த உடல் நம்முடையது என்று நினையாதே. நாய் நரி கழுகு முதலியன இவ்வுடலைத் தம்முடையது என்று எண்ணும். இதுவும் நிலையாமையையே வற்புறுத்துகின்றது.

*இருப்பதுபொய் போவதுமெய் என்(று) எண்ணும் நெஞ்சே!*
*ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே - பருத்ததொந்தி*
*நம்மதென்று நாம் இருப்ப நாய்நரிகள் பேய் கழுகு த ம் ம ( து )*
*என்று தாம் இருக்கும் தாம்!*

எந்தத் தொழிலைச் செய்தாலும் என்னதான் துன்பம் பட்டாலும் முத்தியை விரும்பும் ஞானியர் மனம் மோனத்தையே விரும்பும். தலையில் நீர்க்குடத்தைக் தாங்கிவரும் தாதிப் பெண் என்னதான் கைவீசி வந்தாலும் அவருடைய மனம் தான் தாங்கிவரும் நீர்க்குடத்தையே அது விழாமல் இருக்க வேண்டுமே என்ற எண்ணத்தில் தான் இருக்கும். பாடல் கீழே.

*எத்தொழிலைச் செய்தாலும் ஏது)அவத்தைப் பட்டாலும்*
*முத்தர் மனம் இருக்கும் மோனத்தே - வித்தமாய்க்*
*காதிவிளை யாடிஇரு கைவீசி வந்தாலும்*
*தாதிமனம் நீர்க்குடத்தே தான்!*

*(-தொடரும்...)*

# செம்மொழி இலக்கியங்களில் உயிரியல்

முனைவர் சே.குமரப்பன் (முதல்வர் பணி நிறைவு)
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர் - காரைக்குடி.

**திருவாடானை அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் 1.2.2018 முதல் 10.2.2018 முடிய பத்து நாட்கள் நடைபெற்ற செம்மொழி இலக்கியங்களில் பல்துறைச் சிந்தனைகள் பயிலரங்கில் 6.2.2018 அன்று வழங்கப்பட்ட கட்டுரை.**

செம்மொழி இலக்கியங்களில் சூழ்நிலைஇயல், உயிரியல், விலங்கியல், தாவரஇயல், மருத்துவஇயல், வானிலை இயல், உணவியல் எனப் பல்வேறு அறிவியல் சிந்தனைகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் பலவற்றில் உயிரியல் பற்றிய செய்திகள் பெருவாரியாக உள்ளன. இவற்றில் திருக்குறள், குறுந்தொகை மற்றும் தொல்காப்பியத்தில் காணப்படும் உயிரியல் தொடர்பான கருத்துக்களை இக்கட்டுரையில் இடம்பெறச் செய்துள்ளேன்.

உலகப்பொதுமறை என அழைக்கப்படும் திருக்குறள் ஏறக்குறைய ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்ட நூல். பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான திருக்குறள் உலகின் 80 மொழிகளில் மொழிபெயர்த்த சிறப்புக்குரியது. இந்நூலை இயற்றிய தெய்வப்புலவர் என அழைக்கப்படும் திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகட்டு முன் உயிரியலின் பல பிரிவுகளைக் கூறியிருப்பது வியக்கவைக்கிறது. அன்றைய காலகட்டத்தில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள், அறிவியல் அறிஞர்கள் குறைவாகவே இருந்திருப்பர். அறிவியல் எண்ணங்கள் என்பது அரிதாகவே இருந்திருக்கும். அக்காலகட்டத்தில் விலங்குகள், தாவரங்களின் வகைப்பாட்டியல் (Taxonomy)உயிரினங்களின் பல்லுயிர்ப் பரவல் (Bio-Diversity), விலங்குகளின் நடத்தைஇயல் (Ethology), பண்பு நலன்கள் (Characters), தாவரங்கள் மற்றும் விலங்குகளின் வகைகள் (Types of Plants and animals), வாழும் இடம் (Habitats), இவற்றின் சந்ததிகள் (Youngones), உணவுப் பழக்கவழக்கங்கள் (Food Habits) எனப் பலவற்றைத் திருக்குறளில் பல குறட்பாக்களில் எடுத்துக் கூறியுள்ளார்.

அனிச்சம், குவளை எனும் இருமலர்கள் மட்டும் கூறப்பட்டுள்ளன. இதில் அனிச்சமலர் 4 முறை கூறப்பட்டுள்ளது. நெருஞ்சிப்பழம் எனும் ஒரே பழவகையும் குன்றி மணி எனும் ஒரே விதையும் பனை, மூங்கில் எனும் இரு மரங்களும் யானை 8 முறையும், பாம்பு 3 முறையும், ஆமை, கொக்கு, முதலை, காகம், மீன், நரி, கவரிமான், பசு, காளை, சிங்கம், புலி, ஆடு, குதிரை, முயல், அன்னம், மயில், ஒட்டகம், வாத்து, எருமை ஆகிய உயிரினங்களும் குறட்பாக்களில் கூறப்பட்டுள்ளன. புல், பயிர், கொம்பு, கொடி, மரம், மலர், காய், கனி, வித்து, மொட்டு எனத் தாவரங்களின் வகைகள் மற்றும் வளர்ச்சிப்பருவங்கள் கூறப்பட்டுள்ளன.

**என்பிலதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை அறம்** *குறள் : 77*

எனும் குறளில் எலும்பு இல்லாத உயிர்களான புழு போன்றவை வெயிலில் காய்ந்து அழிந்துவிடும். இதுபோல் அன்பு இல்லாத உயிர் அறத்தினைச் செய்ய இயலாமல் துன்புறும் எனக் கூறியுள்ளார். இக்குறளின் மூலம் விலங்குகளில் எலும்பு உள்ளவையும் எலும்பு அற்றவையும் உள்ளன என்பதைக் கூறியுள்ளார்.

**அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரம்தளிர்த் தற்று** *குறள் : 78*

அன்பில்லாது வாழும் வாழ்க்கை வறண்ட பாலை நிலத்தில் தளிர்விடாத உலர்ந்த மரம் போன்றது எனும் பொருள்படும் இக்குறளில் நிலங்களை வகைப்படுத்தி அதில் பாலைநிலம் ஒன்று என்றும் அது வறண்ட தன்மையுடையது என்றும், இந்நிலத்தில் தாவரங்கள் எளிதாக வளர முடியாது என்பதையும் உணர்த்தி உள்ளார்.

**மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து** *குறள் : 90*

அனிச்ச மலர் மிக மென்மையானது. முகர்ந்தாலே வாடிவிடும்; இதுபோல் வீட்டுக்கு வரும் விருந்தினரை முகம் மலர வரவேற்காமல் முகம் கடுக்க வரவேற்றால் விருந்தினர் முகம் மாறிவிடும். இப்பாடலில் அனிச்ச மலரின் தன்மையை அறிந்து உவமையாகக் கூறியிருப்பது வியப்பைத் தருகிறது.

**ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப் புடைத்து** *குறள் : 126*

ஒரு மனிதனுக்கு அடக்கம் அவசியம். உடலின் ஐம்பொறிகளையும் அடக்கி வாழப்பழகிக் கொண்டால் அது ஏழு பிறவிக்கும் பயனளிக்கும் எனக் கூறும் திருவள்ளுவர் இதற்கு உவமையாக ஆமையின் நடத்தையைக் கூறுகிறார். எப்படி ஆமை தனது உறுப்புக்களை உள்ளே இழுத்து ஓட்டுக்குள் அடக்குகிறதோ அதுபோல் ஐம்புலன்களை அடக்க வேண்டும் எனச் சுட்டிக்காட்டி உள்ளார்.

**பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்**
**வேந்தற்கு வேண்டும் பொழுது** *குறள் : 481*

மன்னன் பகைவரை வெல்லத் தக்க காலம் அறிந்து செயல்பட வேண்டும். அப்பொழுது தான் வெல்ல முடியும் என, கூகை, காக்கை ஆகிய இரண்டு பறவைகளின் உடல்தன்மை, செயல்பாட்டை உவமையாகக் கூறுகிறார். கோட்டானுக்குப் பகலில் கண் தெரியாது. எனவே காகம் கோட்டானை எளிதில் வென்றுவிடும். காகத்திற்கு இரவில் கண்தெரியாது; எனவே கோட்டான் காகத்தை இரவில் எளிதில் வென்றுவிடும். எனவே வெற்றிபெறக் காலம் அறிந்து செயல்படுதல் முக்கியம் என வள்ளுவர் அறிவுறுத்தி உள்ளார்.

**ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்**
**தாக்கற்குப் பேரும் தகைத்து** *குறள் : 486*

எனும் குறளில் ஆட்டுக்கிடாய் காத்திருந்து பாயும்; அது போல் ஊக்கம் உடைய வேந்தனுக்குக் காலம் பார்த்துக் காத்திருந்து செயல்பட வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. மேலும் முழுவலிமையோடு தாக்குவதற்கு ஏற்ற காலம் வரும்வரை காத்திருந்து முழுவலிமையும் ஒரே இடத்தில் செலுத்தி வெற்றிபெற வேண்டும் எனவும் கூறிஉள்ளார்.

**கொக்குஒக்க கூம்பு பருவத்து மற்று அதன்**
**குத்துஒக்க சீர்த்த இடத்து** *குறள் 490*

எனும் குறளில் கொக்கு உணவுபெறும் முறையையும் உணவைப் பெற எவ்வாறு செயல்படுகிறது என்பதையும் அழகு படக்கூறியுள்ளார். கொக்கு மீன் வரும் வரை அமைதியாகக் காத்திருக்கும். எப்பொழுது மீன் வருகிறதோ அப்போது பாய்ந்து சென்று மீனைக் கௌவிப்பிடிக்கும். இதனைப் போல் ஒருவினையைச் செய்யும்போது முயற்சி குன்றாது, சமயத்தையும், இடத்தையும் நழுவவிடாது வினையைச் செய்து முடிக்க

வேண்டும் என நடைமுறை உவமையின் மூலம் எளிதில் புரியும் வண்ணம் கூறியுள்ளார்.

**நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்**
**நீங்கின் அதனைப் பிற** *குறள் 495*

முதலை நீரில் வாழக்கூடிய விலங்கு. அதன் உடல் அமைப்பானது நீரில் வாழ்வதற்கான தகவமைப்புடன் உள்ளது. எனவே நீரில் அது பலம் மிக்கதாக இருக்கும். எனவே பிற விலங்கினங்களை எளிதில் வென்று விடும். ஆனால் அதே முதலையின் உடல் தகவமைப்பு தரை வாழ்க்கைக்கு மிக ஏற்புடையதாக இருக்காது. எனவே அது தரையில் பலவீனமாக இருப்பதால் பிற உயிர்கள் முதலையை எளிதில் வெல்லும். தேர்ந்தெடுக்கும் இடமே வெற்றி தோல்வியை நிர்ணயம் செய்கிறது. எனவே தகுந்த இடத்தைத் தேர்வு செய்து வெல்ல வேண்டும் எனக் கூறுகிறார் வள்ளுவர்.

**கால்ஆழ் களரில் நரிஅடும் கண்அஞ்சா**
**வேலாள் முகத்த களிறு** *குறள் 500*

யானை பலம் மிக்கது. போரில் வேல்கொண்டு தாக்கவரும் வீரர்களைக்கூடக் கொம்பால் குத்தி வீழ்த்தி விடும். ஆனால் இப்பலம் மிக்க யானை புதையும் சேற்றில் சிக்கிக் கொண்டால் சிறுநரி கூட யானையை வென்றுவிடும். எனவே இடனறிந்து வினையைத் தொடங்க வேண்டியது அவசியம். இதில் உருவம் பெருத்த யானையையும் உருவம் சிறுத்த நரியையும் ஒப்பிட்டு எளிதில் புரியும் வண்ணம் செந்நாப்போதார் கூறியுள்ள பாங்கு அருமை.

**காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
**அன்னநீ ரார்க்கே உள** *குறள் : 527*

காக்கை கிடைத்த உணவைத் தானே உண்ணாது. மறைக்காது. கா, கா, எனக் கூவி அழைத்துத் தனது இனத்துடன் கூடி உண்ணும்; அதுபோல் சுற்றத்தை அழைத்து உண்ணும் இயல்புடையவனுக்கு ஆக்கம் வந்து சேரும். அவனைப் பலரும் விரும்புவர். இக்குறளில் திருவள்ளுவர் விலங்குகள் உண்ணும் போக்கை ஆய்வு செய்து காக்கை உணவு உண்ணும் முறையைச் சுற்றம் தழுவுதலுக்கு உமையாகக் கூறியிருப்பது அவரது அறிவியல் அறிவைப் புலப்படுத்துகிறது.

**வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத்து அனையது உயர்வு** *குறள் : 595*

நீரில் வாழும் தாவரங்களின் மலர்கள் நீரின் மேற்பரப்பிற்கு ஏற்பத் தண்டு நீண்டு நீர்ப்பரப்பில் காணப்படும். எவ்வாறு மலர்தாள்களின் நீளம் நீரின் அளவைப் பொறுத்து உள்ளதோ அதுபோல் மக்களின் வாழ்க்கையின் நிலை அவரவர் முயற்சியைப் பொறுத்தே அமையும். எனவே முயற்சியும், ஊக்கமும் இருந்தால் உயர்நிலையை அடையலாம்.

**பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை**
**வெரூஉம் புலிதாக் குறின்** *குறள் : 599*

யானை பருத்த உடலையும் கூரிய கொம்புகளையும் கொண்டது. பலம் மிக்கது. உருவத்தில் பெரியது. எனினும் உருவத்தில் சிறிய புலி தாக்கினால் யானை பயந்து ஓடிவிடும். யானையை விடப் புலியின் ஊக்கம் அதிகம் இருப்பதால் பெரிய யானையை வெல்ல முடிகிறது. எனவே ஊக்கம் உடையவர்கள் வெற்றி பெறுவார்கள் என்பதைப் புலி-யானையின் செயல்திறனை வைத்து விளக்குகிறார் வள்ளுவர்.

**ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை**
**நாகம் உயிர்ப்பக் கெடும்** *குறள் : 763*

எலிகள் கூட்டாகச் சேர்ந்து கடல் போல ஒலித்தாலும், நாகம் சீறினால் எலிக்கூட்டம் ஓடிவிடும். நாகம் மூச்சுவிட்டால் அவை அழியும். இதுபோல் பலமற்றவர்கள் பலர் கூட்டமாகச் சேர்ந்து எதிர்த்தாலும் வீரம் நிறைந்தவன் பயப்படமாட்டான். மாறாக வீரம் நிறைந்தவன் சீறி எழுந்து தாக்கினால் எதிர்க்கூட்டம் மடியும். இக்குறளில் எலியின் இயல்பையும், நாகத்தின் இயல்பையும் உவமையாகக் கூறி விளக்கி உள்ளார்.

**கான முயல்எய்த அம்பினில் யானை**
**பிழைத்தவேல் ஏந்தல் இனிது** *குறள் : 772*

காட்டில் உள்ள முயலைக் கொன்ற அம்பைவிட யானையைக் கொல்லக் குறிவைத்துத் தவறிய அம்பே சிறப்புடையதாகும். இவ் அம்பினை ஏந்திய வீரனும் சிறப்புடையவனாவான்.

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும் *குறள் : 774*

கையில் உள்ள வேலை யானையின் மீது பாய்ச்சிவிட்டு வறிதுநின்ற வீரன் எதிர்வரும் யானையைக் கொல்லத் தன் உடம்பின் மீது பாய்ந்துள்ள வேலைப் பறித்து வீசி மகிழ்வான்.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின் *குறள் : 969*

கவரிமான் மானம் மிக்கது. அதன் உடம்பிலிருந்து ஒரு மயிர் நீங்கினாலும் உயிர் வாழாது. அதுபோல் சான்றோர் அவர் தம் மானத்துக்கு இழுக்கு வரும் என்றால் உயிரை நீப்பர். சான்றோர்கள் மானத்தை உயிரைவிட மேலாகக் கருதுவர் என்பதைக் கவரிமான் மற்றும் அதன் வாழ்க்கை முறையை உவமையாகக் கொண்டு விளக்குவது சிறப்பாகும்.

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று *குறள் : 1008*

சிலரிடம் பெரும் செல்வம் இருக்கும். ஆனால் பிறருக்குக் கொடுத்து உதவமாட்டார்கள். நடுஊரில் நச்சு மரம் பழுத்தால் யாருக்கும் பயன் இருக்காது. இதுபோல் செல்வம் இருந்து பிறருக்கு உதவாமல் இருப்பது நச்சுமரம் பழுத்தது போன்றதாகும். எப்படி நச்சு மரத்தை மக்கள் விரும்பமாட்டார்களோ எப்படி வெறுப்பார்களோ அதுபோல உதவாத செல்வம் உடையவனையும் விரும்பமாட்டார்கள்.

காணின் குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும்
மாண்இழை கண்ஒவ்வேம் என்று *குறள் : 1114*

குவளை மலர்கள் மிக அழகானவை. ஆனால் அழகுமிக்க குவளை மலர்கள் தலைவியின் கண்களைக் கண்டால், தலைவியின் கண்களுக்கு நாங்கள் நிகராகமாட்டோம் என நாணித் தலைகுனியுமாம். குவளை மலரின் தன்மையை அறிந்து அதனைத் தலைவியின் கண் அழகிற்கு ஒப்பிடுவது மிக அருமை.

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை *குறள் : 1115*

அனிச்சப்பூவே மெல்லியது. எடை குறைவானது. இத்தகைய

அனிச்சப்பூவின் காம்பினை நீக்காது இவள் மலரைச் சூடுகின்றாளே! காம்பின் சுமை தாங்காது இடை ஒடிந்துவிடுமே. இனி இங்கு நல்ல பறை ஒலிக்காதே. இக்குறளில் அனிச்சப்பூ மெல்லியது என்றும் பெண்ணின் இடை அதைவிட மெல்லியது எனக் காட்டுவதும் சிறப்பு.

**அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
**அடிக்கு நெருஞ்சிப் பழம்** *குறள் 1120*

அனிச்சப்பூவும் அன்னப் பறவையின் இறகும் மென்மையானவை. அவை கூட மாதரின் கால்களுக்கு நெருஞ்சி முள்ளாகத் தோன்றுகின்றன. மலர் மற்றும் பறவைகளின் தன்மையை ஆய்வு செய்து அதில் மெல்லிய தன்மை உடைய அனிச்சப்பூவையும் அன்னப்பறவையையும், உவமையாகக் காட்டியிருப்பது வள்ளுவரின் அறிவியல் அறிவை நன்கு புலப்படுத்துகிறது. மேலும் இவை நெருஞ்சி முள்ளாகத் தோன்றுவதன் மூலம் பெண்ணின் பாதம் எவ்வளவு மென்மையானது என்பதைப் புலப்படுத்துகிறது.

**முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை**
**நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு** *குறள் : 1274*

மலர இருக்கின்ற மலரின் மொட்டுக்குள் நறுமணம் இருப்பதுபோல் காதலின் புன்முறுவலில் குறிப்பு ஒன்றும் உள்ளது. எப்படி மொட்டுக்குள் உள்ள மணம் தெரியாமல் உணரப்படுகிறதோ அதுபோல் காதலியின் புன்முறுவலில் குறிப்பு உணரப்படுகிறது என மலர்மொட்டை உவமையாகக் கூறியிருக்கும் பாங்கு சிறப்பானது.

**இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று** *குறள் : 100*

இனிய சொற்களைக் கூறாமல் துன்பம் தரும் சொற்களைக் கூறுவது கையில் இருக்கும் கனியைவிட்டுவிட்டுக் காயை விரும்புவது போலாகும். காயைவிடக் கனி சுவையுடையது. பெரும்பாலும் கனியையே விரும்புவர் என்ற அறிவியல் சிந்தனை சிறந்த உவமையாகும்.

**பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
**நயன்உடை யான்கண் படின்** *குறள் : 216*

ஊருக்கு நடுவே உள்ள பயன் தரும் பழமரம் பழுத்தால் ஊரில்

உள்ள மக்கள் பயனடைவர். இதுபோல் மக்களிடத்து அன்பு வைத்திருப்பவனின் செல்வம் அனைவருக்கும் பயன்படும். காய்களை விடக் கனிகளையே மக்கள் அதிகம் விரும்புவர். அதனாலேயே பழமரத்தினை இக்குறளில் உவமையாகக் கூறிஉள்ளார்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின் *குறள் : 217*

மருந்துக்குப் பயன்படும் மரத்தில், அவற்றின் இளம் தளிர் முதல் வேர்வரை அனைவருக்கும் பயன்படும். அதுபோல் பிறருக்கு வழங்கும் பண்புடையவனிடம் உள்ள செல்வமும் மக்கள் அனைவருக்கும் பயன்படும். இக்குறளில் மரத்தின் பாகங்களைக் கூறியுள்ளார் வள்ளுவர்.

நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது *குறள் : 235*

சிப்பியானது உடலுக்குள் முத்தை உண்டாக்கும். ஆனால் முத்தை சிப்பியின் உடலைக் கிழித்து எடுக்க வேண்டும். சிப்பி தன்னை இழந்தாலும் முத்தாக இருந்து ஒளிரும். இதுபோலச் சான்றோர்களின் பூத உடல் மறைந்தாலும் புகழ் உடம்பு ஒளிரும். இவ் உவமையில் முத்துச் சிப்பியின் வாழ்க்கை முத்து எடுக்கும் பாங்கு பற்றிய அறிவியல் புலப்படுகிறது.

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கில் கரியார் உடைத்து *குறள் : 277*

குன்றுமணி புறத்தே சிவந்து மூக்கில் கரும்புள்ளி பெற்றிருக்கும். மனிதர்கள் சிலர் வெளுப்பாக இருப்பார்கள்; ஆனால் அகத்தே கறுத்து இருப்பார்கள். வஞ்சனை உடையவர்களாக இருப்பர். இவரிடத்து எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். இக்குறளில் குன்றிமணியின் நிறம், தோற்றத்தை உவமையாகக்காட்டி வஞ்சனை உடையவரிடம் கவனமாக இருக்க வேண்டும் என இயம்பப்பட்டுள்ளது.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை *குறள் : 322*

அறநூல்கள் கூறும் எல்லா அறங்களிலும் மேலானது தன்னிடம்

உள்ளதை மற்றவர்களோடு பகுத்து உண்பதாகும். இக்குறளின் மூலம் இயற்கை வழங்கும் உணவை உயிர்கள் பகுத்து உண்ணுகின்றன. ஓர் உயிரினம் மட்டும் உண்ணாமல் பல உயிரினங்களும் உண்ணுவதால் பல் உயிர்ப்பெருக்கம் மிக அவசியம். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பல்லுயிர்ப் பெருக்கம் பற்றித் திருக்குறளில் கூறப்பட்டிருப்பது மிகச் சிறந்த அறிவியல் சிந்தனையாகும்.

திருவள்ளுவர் பல்வேறு தாவரங்கள், விலங்குள் பற்றியும் அவைகளின் வாழ்க்கை முறை, பண்பு நலன்கள் ஆகியவற்றையும் நன்கு அறிந்து இந்த அறிவியல் சிந்தனைகளை உவமையாகக் கையாண்டிருப்பது வியக்கத்தக்கதும் போற்றத்தக்கதும் ஆகும்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### கூடா ஒழுக்கம்

(வேண்டாத தீய ஒழுக்கம்)

1. **வஞ்ச மனத்தான் படிற்று ஒழுக்கம் பூதங்கள்**
   **ஐந்தும் அகத்தே நகும்.**

வஞ்ச மனத்தான் - வஞ்சகம் பொருந்திய மனத்தை உடையவன்; படிற்று ஒழுக்கம் - குற்றமுள்ள ஒழுக்கம்; பூதங்கள் ஐந்தும் - ஐந்து பூதங்களும்; அகத்தே நகும் - அவன் உள்ளே இருந்து ஏளனம் செய்யும்.

வஞ்சகம் பொருந்திய மனத்தை உடையவனின் குற்றமுள்ள ஒழுக்கத்தை அவன் உள்ளே இருக்கும் ஐந்து பூதங்களும் ஏளனம் செய்து சிரிக்கும்.

2. **வான்உயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்**
   **தான்அறி குற்றப் படின்.**

வான்உயர் தோற்றம் - வான்போல் உயர்ந்த பெருமைத் தோற்றம்; எவன்செய்யும் - என்ன பயனைச் செய்யும்; தன்நெஞ்சம் - ஒருவனது நெஞ்சம்; தான் அறிகுற்றப் படின் - தான் குற்றம் என்று அறிந்த குற்றத்தின் கண் சார்ந்துவிட்டால்.

குற்றம் என்று அறிந்து கொண்டே அந்தக் குற்றத்தில் ஒருவனுடைய நெஞ்சம் சார்ந்துவிட்டால் அவனுடைய வான்போல் உயர்ந்த பெருமைத் தோற்றத்தால் ஒரு பயனும் இல்லை.

**3. வலிஇல் நிலைமையான் வல்உருவம் பெற்றம்**
**புலியின் தோல் போர்த்துமேய்ந் தற்று.**

வலிஇல் நிலைமையான் - வலிமை இல்லாத நிலையினை உடையவன்; வல்உருவம் - வலிமையானவன் என்பது போல் காட்டும் வடிவம்; பெற்றம் - பசு; புலியின்தோல் போர்த்து மேய்ந்தற்று - புலியினது தோலைப் போர்த்திக் கொண்டு பயிரை மேய்வது போலாம்.

மனவலிமை இல்லாதவன் தான் வலிமை உள்ளவன் போல் வேடம் கொள்வது, பசு புலித்தோலைப் போர்த்திக் கொண்டு பயிரை மேய்வது போலாகும். வேடம் வெளிப்பட்டு விடும்.

**4. தவம்மறைந்து அல்லவைசெய்தல் புதல்மறைந்து**
**வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.**

தவம் மறைந்து - தவ வேடத்திற்குள்; மறைந்து கொண்டு; அல்லவை செய்தல் - தீயனவற்றைச் செய்தல்; புதல்மறைந்து - புதருக்குள் மறைந்து கொண்டு; வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று - வேடன் பறவைகளைப் பிடிப்பது போலாம்.

தவவேடத்திற்குள் மறைந்து கொண்டு தீயனவற்றைச் செய்தல் கூடாது. அவ்வாறு செய்தல் வேடன் புதருக்குள் மறைந்திருந்து பறவைகளைப் பிடிப்பதைப் போலாம்.

**5. பற்று அற்றேம் என்பர் படிற்று ஒழுக்கம் எற்றுஎற்றென்று**
**ஏதம் பலவும் தரும்.**

பற்றுஅற்றேம் என்பார் - உலகப் பற்றினை ஒழித்து விட்டோம் என்று கூறுபவர்; படிற்று ஒழுக்கம் - மறைந்த குற்றங்கள் ஆகிய ஒழுக்கம்; எற்றுஎற்றென்று - ஏன்செய்தோம் ஏன் செய்தோம் என்று; ஏதம் பலவும் தரும் - பலதுன்பங்களைத் தரும்.

உலகப் பற்றினை ஒழித்து விட்டோம் என்று கூறுபவர் மறைந்து செய்யும் குற்றங்கள், ஏன்செய்தோம் ஏன் செய்தோம் என்று எண்ணுமளவில் பல துன்பங்களைத் தரும்.

**6. நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்.**

நெஞ்சின் துறவார் - மனத்தால் பற்றை நீக்காதவர்; துறந்தார் போல் - பற்றில்லாதவர் போல; வஞ்சித்து வாழ்வாரின் - வஞ்சக எண்ணத்தோடு வாழ்வாரை விட; வன்கணார் இல் - கொடுமையானவர்கள் இல்லை.

மனத்தளவில் பற்றை நீக்காமல் பற்றில்லாதவர் போல வஞ்சக எண்ணத்தோடு வாழ்வபவரை விடக் கொடுமையானவர் இல்லை.

**7. புறம்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி**
**மூக்கிற் கரியார் உடைத்து.**

புறம்குன்றி கண்டனைய ரேனும் - குன்றிமணியின் புறத்தே சிவப்புப் போலத் தோற்றமுடையவராயினும்; அகங்குன்றி மூக்கின் - குன்றியின் மூக்குப் பகுதிபோல்; கரியார் உடைத்து - மனம் கறுத்தவர் உளர்.

குன்றிமணியின் சிவப்புப்போல் புறத்தோற்றம் உடையவராயிருப்பினும் அதன் மூக்குப் பகுதியில் கரியதாக மனம் கறுத்தவரும் உளர்.

**8. மனத்தது மாசுஆக மாண்டார்நீர் ஆடி**
**மறைந்து ஒழுகும் மாந்தர் பலர்.**

மனத்தது மாசுஆக - மனத்தினில் குற்றம் நிறைந்திருக்க; மாண்டார் - தவம்கொண்டார் போல்; நீர்ஆடி - நீரில் மூழ்கி; மறைந்து ஒழுகும் - தங்களை மறைத்துக் கொண்டு வாழும்; மாந்தர் பலர் - மாந்தர் உலகில் பலர் உளர்.

மனத்தினில் குற்றம் நிறைந்திருக்க, தவம் கொண்டவரைப் போல் நீரில் மூழ்கித் தங்களை மறைத்துக் கொண்டு வாழும் மாந்தர் உலகில் பலர் உளர்.

**9. கணைகொடிது யாழ்கோடு செவ்விது ஆங்கு அன்ன**
**வினைபடு பாலால் கொளல்.**

கணைகொடிது - அம்பு வடிவால் சிறந்ததாயினும் செயலால் கொடியது; யாழ்கோடு செவ்விது - யாழின் கோடு வளைந்திருந்தாலும் யாழின் இசை செவ்விது; ஆங்கு அன்ன - அதுபோல; வினைபடு பாலால் கொளல் - வடிவம் நோக்காது செயலால் அவர் தன்மையை அறிந்து கொள்ளவேண்டும்.

வடிவினால் அம்பு சிறந்ததாயினும் செயலால் கொடியது; யாழின் கோடு வளைந்திருந்தாலும் செயலாகிய இசை இனியது; அதுபோல ஒருவர் வடிவம் கண்டு நோக்காது செயலால் அவர் தன்மையை அறிந்து கொள்ள வேண்டும்.

**10. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்.**

மழித்தலும் நீட்டலும் வேண்டா – தலைமயிரை மழித்தலும் நீண்டதாக வளர்த்தலும் ஆகிய வேடம் வேண்டாம்; உலகம் பழித்தது – தவத்திற்கு ஆகாதவை என உலகத்தார் பழித்தவற்றை; ஒழித்துவிடின் – நீக்கிவிட்டால்.

தவத்திற்கு ஆகாதவை என்று உலகத்தார் பழித்தவற்றைத் தவம் உடையவர்கள் நீக்கிவிட்டால் தலைமயிரை மழித்தலும் நீண்டதாக வளர்த்தலும் ஆகிய வேடம் தேவையில்லை.

*(-தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

20.01.2018 அன்று கோவிலூரில் உள்ள முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளி ஆண்டு விழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. பள்ளித் தலைமை ஆசிரியை திருமதி. மணிமொழி முருகன் ஆண்டறிக்கை வாசித்தார். மடாலயக்கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் சிறப்பு விருந்தினரை அறிமுகம் செய்து வைத்தார். தேவகோட்டை சேவுகன் அண்ணாமலை கல்லூரி முதல்வர் டாக்டர் சந்திரமோகன் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு உரையாற்றிக் குழந்தைகளுக்குப் பரிசுகளை வழங்கினார். குழந்தைகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றது. பத்தாண்டுகள் பணி முடித்த ஆசிரியைகள் சுகன்யா, பத்மா ஆகியோர் கௌரவிக்கப்பட்டனர். ஆசிரியை கௌரி வரவேற்றார். பத்மா நன்றி கூறினார்.

கோவிலூர் நாச்சியப்ப சாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் விளையாட்டு விழா 27.01.2018 அன்று நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் விளையாட்டுப் போட்டிகளைத் தொடக்கி வைத்தார். முதல்வர் டாக்டர். செல்லப்பா வரவேற்றார். உடற்பயிற்சி இயக்குனர் விஸ்வலிங்கம் ஆண்டறிக்கை வாசித்தார். மடாலய கல்வி ஆலோசகர் டாக்டர். குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். பேரா. டாக்டர். பெவின்சன் பேரின்ப ராஜ் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகளை வழங்கினார்.

26.01.2018 அன்று கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் சார்பில் 69வது குடியரசு தினவிழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் முன்னிலையில் சிறப்பாக நடைபெற்றது. புதுக்கோட்டை ஞானாலயா ஆய்வு நூலகத்தைச் சார்ந்த கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தேசியக் கொடியை ஏற்றி உரையாற்றினார். திருமதி. டோரத்தி கிருஷ்ணமூர்த்தி வாழ்த்துரை வழங்கினார். டாக்டர். செல்லப்பா வரவேற்றார். டாக்டர். ரவீந்திரன் நன்றி கூறினார். குழந்தைகளின் கலை

நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மடாலயக்கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் திருமதி. மணிமொழிமோகன், மணிமொழி முருகன், மாயாண்டி கலந்துகொண்டனர்.

**31.01.2018 கோவிலூர் மடாலயத்தின் 200வது ஆண்டு நிறைவு விழா**

கோவிலூர் மடாலயம் தோன்றி 200 ஆண்டுகள் நிறைவு பெற்றதைக் கொண்டாடும் வகையில் 3 நாட்கள் விழாக்கள் ஏற்பாடு செய்யப்பட்டு 31.01.2018 அன்று முதல் நாள் நிகழ்வு தொடங்கியது. காலையில் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் முன்னிலையில் பிள்ளையார்பட்டி பிச்சைக்குருக்கள் தலைமையில் கணபதி ஹோமம், நவக்கிரக ஹோமம் நடைபெற்றது. இதனைத் தொடர்ந்து மாலை தொடக்கவிழா நடைபெற்றது. மடாலய அறநிலை உறுப்பினர் ஏ.ராமநாதன் வரவேற்றார். கவிஞர். ரெ.முத்துக்கணேசனாருக்கு அருட்கவி அண்ணல் எனும் பட்டத்தைக் கோவிலூர் ஆதீனம் வழங்கி பாராட்டிப்பேசினார். முத்துக்கணேசனாரின் சிறப்புகள் குறித்து டாக்டர் அய்க்கண் பேசினார். 200வது ஆண்டு நிறைவு விழா மலரை சென்னை ஐ.ஐ.டி பேராசிரியை முனைவர் தேன்மொழி வெளியிட்டார். இத்துடன் கோவிலூர் மடாலயம் பகுதி-2, உலகப்புகழ் பெறும் கோவிலூர் திருமடம், கோவிலூர் கல்வெட்டுகளும் அவற்றின் செய்திகளும் எனும் 3 நூல்கள் வெளியிடப்பெற்றன. இந்நூல்களை மடாலய அறக்கட்டளை உறுப்பினர் நாராயணன் பெற்றுக்கொண்டார். சிறப்பு விருந்தினர் தேன்மொழி அருணாசலம் பேசுகையில் கோவிலூர் மடாலயம் 200 ஆண்டுகளாக சாதாரண மக்களுக்குச் சேவை ஆற்றிவருவது பாராட்டுக்குரியது. முந்தைய மடாதிபதிகள் பன்னிருவரும் சிற்றப்பாகச் சேவை ஆற்றி உள்ளார். தற்போதைய மடாதிபதி மெய்யப்ப சுவாமிகள் முந்தைய குருமுதல்வர்கள் அடியொற்றிப் பணிகள் தொய்வடையாமல் விரிவுபடுத்திச் செய்து வருவது சிறப்பாகும். ஆன்மீகம், கல்வி, மருத்துவம், தமிழ் வளர்ச்சி, சமூகப்பணி, செட்டிநாட்டு விழாக்கள், பழக்கவழக்கங்களை ஆவணப்படுத்துதல், அருங்காட்சியகம், கல்வி உதவித்தொகை, முதியோர் உதவித்தொகை, திருமண உதவித்தொகை எனப் பலபணிகளை ஆற்றிவருவது பாராட்டுக்குரியது. இம்மடாலயம் மேலும் வளர்ந்து பல்லாண்டுகள் பணிதொடர இறையருள் புரிய வேண்டும் என்றார்.

கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பேசுகையில் 200 ஆண்டுகளுக்கு முன் குறிப்பிட்ட சமூகத்தினரே வேதாந்தம் படிக்க இயலும். சமஸ்கிருதம் தெரியாதவர்களுக்கு மதிப்பில்லாமல் இருந்தது. இதனை

உடைத்தெறிந்து சாமான்யர்கள் வேதாந்தம் பயிற்றுவித்தல், ஆன்மீகப் பணிசெய்தல் என்ற இருநோக்கத்தோடு குருமுதல்வர் முத்துராமலிங்க ஆண்டவர் இம்மடாலயத்தைத் தொடங்கினார். மற்ற மடாதிபதிகளும் சிறப்பாகப் பணியாற்றி அவர்கள் ஆசியுடன் நான் 13வது மடாதிபதியாக பணிசெய்து வருவது முற்பிறவியில் செய்த பாக்கியம் என்றார்.

இதனைத் தொடர்ந்து கவிஞர். மீனவன் தலைமையில் ஐம்பெரும் பூதங்கள் எனும் தலைப்பில் தேவிநாச்சியப்பன், ரவிச்சந்திரன், கா.நாகப்பன், மெய்யாண்டவர், பேரா. கார்மேகம் கவிதை வாசித்தனர். கோவிலூர் மடாலயப் பள்ளிக் குழந்தைகளின் கலை நிகழ்ச்சி நடைபெற்றது.

01.02.2018 அன்று கோவிலூர் மடாலய 200வது ஆண்டு நிறைவு விழாவின் இரண்டாவது நாளில் தமிழ்க் கருத்தரங்கம் நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் வரவேற்றார். வழக்கறிஞர் இலக்கியச் சுடர் ராமலிங்கம் சமயம் வளர்த்த தமிழ் எனும் தலைப்பிலும் அமுதசுரபி ஆசிரியர் திருப்பூர் கிருஷ்ணன் சங்கம் வளர்த்த தமிழ் எனும் தலைப்பிலும் டாக்டர். வள்ளி கோவிலூர் மடாலயம் வளர்த்த தமிழ் எனும் தலைப்பிலும் பேசினர். கோவிலூர் மடாலயம் தமிழுக்காகச் செய்து வரும் சேவை மிகப் பெரியது. சங்கத் தமிழ்நூல் அனைத்திற்கும் சிறந்த தமிழ் அறிஞர்களாகக் கொண்டு உரை எழுதி செம்பதிப்பாக டில்லியில் குடியரசுத் தலைவர் மாளிகையில் டாக்டர். ஏ.பி.ஜே. அப்துல்கலாம் அவர்களைக் கொண்டு வெளியிடச் செய்தது. மாணவர்களுக்கான பல நூல்களை வெளியிட்டுள்ளது. சிலப்பதிகார மாநாடு, தொல்காப்பியர் மாநாடு, திருவள்ளுவர் விழா போன்ற பல நிகழ்வுகளை நடத்தியுள்ளது மாணவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் நடத்தி இளம் தலைமுறையினரிடம் தமிழ் ஆர்வத்தை ஊட்டி வருவது பாராட்டுக்குரியது எனப் புகழாரம் சூட்டினர். திருக்குறள் உலகப் பொதுமறை இறைவணக்கம் உண்டு. ஆனால் எந்த இறைவன் எனக்குறிப்பிடப்படவில்லை. வள்ளுவர், பாரதி, கம்பர், இளங்கோ ஆகியோர் மகாகவி. மகாகவி எனில் அவர்கள் இயற்றிய பாடல்கள் எக்காலத்திற்கும் பொருந்தும் எனப் பேசினர். நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் டாக்டர். செல்லப்பா நன்றி கூறினார். கோவிலூர் மடாலயக் கல்லூரி மாணவர்களின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

மடாலய அறநிலை உறுப்பினர்கள் கண்ணப்ப செட்டியார், நாராயணன், பாலபுரஷ்கர் விருதுபெற்ற செல்லகணபதி, டாக்டர். அய்க்கண், பழனி ராகுலதாசன், புலவர். தெ.முருகசாமி, டாக்டர். கரு.முத்தையா உள்ளிட்ட பலரும் கல்லூரி, பள்ளி முதல்வர்களும் பங்குபெற்றனர்.

**மருந்தின்றி வலிபோக்க சிகிச்சை காந்திகிராம நிகர்நிலை பல்கலைக்கழக வேந்தர் பேச்சு**

02.02.2018 அன்று கோவிலூர் மடாலயத்தின் 200ம் ஆண்டு நிறைவு விழாவின் இறுதி நாள் நிகழ்ச்சி சுதர்சன ஹோமத்துடன் துவங்கியது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற நிறைவு விழாவில் பேரா. இளம்பிறை மணிமாறன் உள்ளம் பெருங்கோயில் எனும் தலைப்பில் பேசினார். அவர் பேசுகையில் மடாலயப் பணிகளைப் பாராட்டியதோடு மனதிற்கும் உடல் நலத்திற்கும் தொடர்பு உண்டு. மன அழுத்தம் ஏற்படும் போது இரத்த அழுத்தம் கூடுகிறது. எனவே உடலுக்குப் பயிற்சி செய்வது போல் உள்ளத்திற்கும் பயிற்சி தேவை. நாம் இறைவனை நேசிக்கிறோம் என்பது முக்கியமல்ல இறைவன் யாரை நேசிக்கிறான் என்பதே முக்கியம். தினமும் இரவு படுக்கும் முன் இன்று யாருக்கும் உதவினோமா? இன்சொற்கள் கூறினோமா என யோசித்து செயல்பட வேண்டும். சவால்களைச் சந்திக்கிற மன உறுதியைப் பெற வேண்டும். சவால்களைச் சந்திக்காமல் வெற்றி பெற முடியாது. மனம் தான் மகிழ்ச்சி தருவது; மனதிற்குள் வைத்து இறைவனை வழிபட வேண்டும். மனதிற்குள் இறைவன் இருப்பதால் உடலைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் எனத் திருமூலர் திருமந்திரத்தில் கூறுகிறார். இ.எம்.பாஸ்டர் என்பார் இந்திய வழிபாட்டு முறைகளைப் பாராட்டி பாஸ்சேஜ்கு இந்தியா என ஒரு நூல் எழுதினார். பின் நூல் பெயரை பாசேஜ்கு பாரடைஸ் என மாற்றினார். நல்ல மனம் வேண்டும் என அபிராமி பட்டர் கூறினார். மனதில் உறுதி வேண்டும் எனப் பாரதி கூறினான். எனவே மனதிற்குப் பயிற்சி எடுத்து நல்ல மனது இருந்தால் குடும்பத்தில், நாட்டில் சண்டை சச்சரவு குறையும். மகிழ்ச்சி அமைதி அதிகரிக்கும் என்று கூறினார். விழா நிறைவுரையை காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகத்தின் வேந்தர் டாக்டர் அண்ணாமலை ஆற்றினார். அவர் பேசுகையில் மருந்து இல்லாமல் உடல் வலியைப் போக்கும் கைனடிக் செயின் ஆக்டிவேட்டிங் டெக்னிக் (**"Kinetic Chain Activating Technique"**) எனும் மருத்துவ முறையைக் கண்டு பிடித்திருப்பதாகவும் இதற்கு அறிவுச் சொத்துரிமை பதிவு பெற்றிருப்பதாகவும், ஆஸ்திரியா, செக்கோஸ்லாவாகியா ஆகிய நாடுகள்

இம்மருத்துவமுறையை ஏற்றுக் கொண்டு செயல்படுத்த உள்ளன என்றும் அடுத்தமாதம் இது தொடர்பாக அமெரிக்கா செல்ல இருப்பதாகவும் கூறினார். திருமூலரின் திருமந்திரத்தைப் படித்து, அதில் சிலவற்றை எடுத்து நவீன மருத்துவமுறைகளையும் இணைத்து இம்மருத்துவ சிகிச்சையை உருவாக்கியதாகவும் கூறினார். மேலும் தொழிலதிபர் கோயாங்காவிற்கு மருத்துவ சிகிச்சை அளிக்க ஜெர்மனி சென்ற போது மாக்ஸ் முல்லர் இல்லம் சென்று பார்த்தேன். அவர் திருமூலரின் திருமந்திரத்தை ஜெர்மானிய மொழியில் மொழி பெயர்த்து வைத்துள்ளார் எனக் கூறினார். சிறப்பு விருந்தினர் டாக்டர். அண்ணாமலையை அறிமுகம் செய்வித்து மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் பேசினார். இதுவரை இந்திய குடியரசுத் தலைவர் இல்லாமல் டாக்டர். அண்ணாமலை வேந்தராக நியமிக்கப்பட்டுள்ளார். குஜராத் பூகம்பத்தின் போது இவர் ஆற்றிய சேவையைப் பாராட்டி குஜராத் அரசு இவருக்கு விருது வழங்கி உள்ளது. பாரத் பிரதமர் நரேந்திரமோடி, அப்பல்லோ மருத்துவமனைத் தலைவர் பிரதாப்ரெட்டி போன்றோருக்கு சிகிச்சை அளித்து வருகிறார். பல்கலைக்கழகங்களின் பாடத்திட்டக்குழு உறுப்பினராக இருப்பதோடு பல தொழில் நிறுவனங்களுக்கு ஆலோசகராக உள்ளார் எனக் கூறினார். பேரா. கார்மேகம் வரவேற்றார். மடாலய அலுவலக மேலாளர் அழகப்பன் நன்றி கூறினார். சென்னை சுருதிசாகர் கீர்த்தனா குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சியுடன் விழா நிறைவடைந்தது.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## விருத்த குமார பாலர் ஆனது

விக்கிரம பாண்டியன் சிறந்த முறையில் ஆட்சி புரிந்து வந்த காலத்திலே மதுரை மாநகரத்திலே விருபாக்ஷன் என்ற வேதியன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு, கற்பிலே சிறந்த சுபவிரதை என்ற மனைவி இருந்தாள். பல ஆண்டுகளாகக் குழந்தை பிறக்காததால் இருவரும் சேர்ந்து பல சிவதருமங்களைச் செய்தனர், விரதங்களை அனுஷ்டித்தனர். இவ்வாறாக அருந்தவம் புரிந்ததாலே அவர்களுக்குப் பெண் குழந்தை யொன்று பிறந்தது. குழந்தைக்குக் கௌரி என்று பெயரிட்டுப் போற்றி வளர்த்து வந்தார்கள்.

கௌரிக்கு ஐந்து வயதாயிற்று. அந்தச் சிறு வயதிலேயே அவள் பிறவி நோயைப் போக்குவதற்கான உயர்ந்த வழியை ஆராயத் தொடங்கினாள். தனது தகப்பனாரிடம் சென்று, தந்தையே ! இந்தப் பிறவியை ஒழிக்கும் திவ்ய மந்திரம் எதுவோ? என்று வினாவினாள்.

விருபாக்ஷன் வியப்படைந்தான். மிகுந்த சந்தோஷத்தோடு தன் மகளுக்குப் பராசக்தி மகா மந்திரத்தைப் பேரன்புடன் உபதேசம் செய்தான். இது கேட்டுணர்ந்த கௌரியும் மகாமந்திரத்தை மிகுந்த பயபக்தி சிரத்தையுடன் ஜபம் செய்துகொண்டு வந்தாள்.

வயது ஏறஏற கௌரியும் எழில் மிகுந்தவளாகிப் பூரித்து வளர்ந்து வந்தாள். கல்யாண வயதும் வந்து விட்டது. தன் அருமைக் குமாரியின் மணத்தின் பொருட்டு நல்ல வரனை எதிர்நோக்கி யிருந்தான் விருபாக்ஷன். இப்படியிருந்த காலத்தில் அயலூர் பிரம்ம சாரியொருவன் பிச்சையெடுத்துக் கொண்டு வந்தான். அவர் ஒரு வைஷ்ணவப் பிரம்மசாரி. அவனுக்குத் தனது மகளைக் கொடுக்க விருப்பங் கொண்டான் விருபாக்ஷன். யாரையும் கலந்து ஆலோசிக்காமல் வைணவப் பிரம்மசாரிக்குத் தன் மகள் கௌரியைக் கன்யாதானம் செய்து கொடுக்கத் துணிந்து விட்டான். எதையும் ஆராய்ந்து பார்க்காமல் தன் மகள் கௌரியைத் தாரை வார்ப்பதைக் கண்ட சுபவிரதையும் சொந்தக்காரர்களும் மிகுந்த கவலை கொண்டனர். விதியின் செயலே என்று எண்ணி வருந்தினர். பிரம்மசாரியின் குலம், கோத்திரம், சூத்திரம் எல்லாம் ஒத்திருந்தன ஆனால் மதம்தான் வைஷ்ணவமாக இருந்தது. இதனைத் தெரிந்த சுபவிரதையும் சொந்தக்காரரும் ஒருவாறாக ஒப்புக்கொண்டனர். வேதநீதிக்கு உட்பட்டு விவாகம் நடந்தேறியது. பிற்பாடு பற்பல சிறந்த சீர் வரிசைகளுடன் தன்மகள் கௌரியை அவளது மணவாளனோடு அவனது ஊருக்கு அனுப்பி வைத்தான் விருபாக்ஷன்.

வைஷ்ணவப் பிராமணன் மனைவி கௌரியுடன் வீடு சென்றான். வைஷ்ணவப் பெற்றோர்கள் மகனின் செய்கை கண்டு வாட்டமுற்றனர். சிவக் கோலம் கொண்டு சிவசிந்தனையுடன் துலங்கிய கௌரியின் மீது மிகுந்த வெறுப்புக்கொண்டனர். அவளை ஒதுக்கி வைத்தனர். ஒருநாள் அவர்கள் எல்லாரும் பக்கத்து ஊருக்கு ஒரு கல்யாணத்திற்காகச் செல்ல வேண்டிவந்தது. வீட்டில் கௌரியைத் தனியே விட்டு விட்டுப் பூட்டிக்கொண்டு போய்விட்டனர். தனியே விடப்பட்ட கௌரி பலவாறாக எண்ணமிட்டாள். குற்றம் நீங்குமாறு ஒரு சிவனடியாரையும் காண முடியவில்லையே என்று ஏங்குகினாள். பெருங்கவலை கொண்டிருந்தாள்.

தனது அருமைப் பக்தையின் கவலையைப் போக்கத் திருவுள்ளம் கொண்டார் சோமசுந்தரப் பெருமான். உடனே சைவக்கிழவர் போன்று உருவம் கொண்டார். சிவ சின்னங்கள் சிறந்து விளங்க விருத்த வேதியரான சிவபெருமான் கௌரியின் வீட்டுக்குள்ளே வந்து புகுந்தார். கௌரி மிகுந்த அன்புடன் அவ் வந்தண முதியவரை வரவேற்று உபசரித்தாள். வேதியர் தாம் பசியோடு வந்திருப்பதைத் தெரிவித்தார்.

வீடுபூட்டப்பட்டிருப்பதைப் பற்றிக் கௌரி பெரிதும் வருந்தினாள். இது கண்ட கிழவர், நீ தொட்டால் பூட்டு திறந்துகொள்ளும் என்று பரிவுடன் அருளினார். கிழவர் சொன்னபடியே நடந்தது. அடுக்களையில் சென்ற கௌரி அமுது சமைத்து, கிழவருக்கு இட ஆயத்தமானாள். சைவக் கிழவருக்கு ஏற்ற சிறந்த உபசாரங்களை யெல்லாம் செய்து மிகுந்த அக்கறையுடன் அமுது படைத்தாள். தேவக் கிழவர் திருவமுது செய்தருளினார். அமுதுண்ட கிழவர் மூப்பு நீங்கப் பெற்றார் ! என்ன விந்தை ! மன்மதனைப் பழிக்கச் செய்யும் பேரழகுடன் நல்ல கட்டுடைய வாலிபனாக மாறி நின்றார் ! வெண்ணீறு சந்தனமாயிற்று உருத்திராட்சமாலை நல்ல பொன் மணி மாலையாக மாறியது. அந்த யௌவனக் கோலத்தைக் கண்ட கௌரி கற்பிற் சிறந்தவள் ஆகையால் திகைத்தாள். மனம் பதைக்க, உடல் வியர்க்க, மிகுந்த பயத்துடன் நடுங்கிப்போய் ஒரு பக்கமாக ஒதுங்கி நின்றாள்.

அந்தச் சமயம் பார்த்து அயலூர் சென்றிருந்த கௌரியின் மாமியும் சொந்தக்காரரும் திரும்பிவிட்டனர். பதினாறு வயதுடன் விளங்கிய அந்தணப்பெருமான் உடனே பச்சைக் குழந்தையாக மாறிவிட்டான். ஆடையின்மேல் கிடந்தது சிவக் குழந்தை. குழந்தை அழத் தொடங்கியது. பரபரப்புடன் உள்ளே புகுந்த கௌரியின் மாமி குழந்தையைக் கண்டாள்; திகைப்புக் கொண்டாள். தன் மருமகளைப் பார்த்து, ஏது இந்தக் குழந்தை? என்று சினத்துடன் வினவினாள். அதற்கு கௌரி, தேவத்தன் என்னும் அந்தணன் தனது தனைவியோடு இங்கே வந்தான். குழந்தையைப் பார்த்துக் கொள்ளுமாறு சொல்லிவிட்டுப் போனான் என்றாள். இதனைக் கேட்ட வைணவராகிய மாமியும் மாமனும் பொறுமையும் கருணையும் இழந்தவர்களானார்கள். சைவக் குழந்தையின்மேல் அன்பு கொண்டவளே ! நீ எங்களுக்கு வேண்டாதவள். இந்தக் குழந்தையையும் எடுத்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறி விடு என்று கோபத்துடன் சொல்லி அவளைக் குழந்தையும் கையுமாகத் துரத்தி விட்டனர்.

வெளியேறிய கௌரி ஒன்றும் தெரியாதவளாகி மனம் கலங்கினாள். தாயற்ற குழந்தையின் திருமுகம் பார்த்துத் தளர்ந்தாள். சோமசுந்தரப் பெருமானை இடைவிடாது தியானம் செய்துகொண்டே உமா மகா மந்திரத்தை உச்சரித்தாள். என்ன ஆச்சரியம் ! கையிலிருந்த குழந்தையைக் காணோம். உடனே ஆகாயத்திலே சிவபெருமான் உமாதேவியாருடன் ரிஷப வாகனத்திலே திருக்காட்சி தந்தருளினார். தேவக் காட்சி கண்ட கௌரி சிவானந்தக் கடலில் மூழ்கினார்.

உமாதேவியின் திருமந்திரத்தை உச்சரித்து வந்த கௌரிக்கு சாரூபம் அளித்தருளினார் சிவபெருமான். கௌரியையும் உமையின் திருவடிவாக்கித் தன்னிடம் ஐக்கியமாக்கிக் கொண்டார். கண்ட யாவரும் வணங்கினர். தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். ரிஷப வாகனம் கௌரி சுந்தரரைத் தாங்கி விண்ணேறிச் சென்றது.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்